21st August 1961]

THE HON. SRI R. VENKATARAMAN : இந்தியா சர்க்கார் "எண்ணெ வித்துக்கள்" என்ன என்ன என்று குறிப்பிட்டு ஒரு சர்க்குலர் அனுப்பினர்கள் அதைப் படிக்கிறேன். "Coconut has to be understood to mean coconut—fresh or dried, shelled or unshelled including copra, but excluding tender coconuts." ஆகையால் இளநீர்களைத் தவிர மற்றது எல்லாம் எண்ணெ வித்துக்கள் என்று விளக்கம் கொடுத்திருக்கிறார்கள்.

DEPUTY SPEAKER : Questions are over.

[*Note*. An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]

II. POINT OF ORDER *re* PUTTING SUPPLEMENTARY QUESTIONS.

SRI S. M. ANNAMALAI : On a point of order, Sir. சட்ட மன்ற உறுப்பினர்களுக்கு உபகேள்வி கேட்க உரிமை இருக்கிறது. அதனலேயே நாங்கள் உபகேள்வி கேட்க அனுமதிக்கப்படுகிறோம். என்னுடைய மெயின் கேள்வியே சரியான முறையில் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்படாததால்—அது வேறுவிதமாக மாற்றி அமைக்கவும் பட்டிருப்பதால் அதைப் பற்றி கேட்க எனக்கு உரிமை இல்லை என்றால் வேறு எந்த வகையில் அதைப்பற்றி நான் எழுப்ப முடியும் என்று கேட்கிறேன்.

DEPUTY SPEAKER : While the hon. Members have got a right to put supplementary questions, the Chair has got the right to allow or disallow a supplementary question.

III. PERSONAL EXPLANATION UNDER QUESTION NO. 1290.

THE HON. SRI V. RAMAIAH : On a point or personal Explanation Sir ; திரு. என். ஆர். தியாகராஜன் போட்ட மூலக் கேள்விக்கு (கேள்வி—1290) கனம் மூக்கைய தேவா அவர்கள் உபகேள்வி போடும் போது மதுரை ஜில்லாவில் நான் சுற்றுப் பிரயாணம் செய்தபோது அந்தப் பிராந்திய விவசாயிகளுக்கு கம்பளிப் பூச்சியினல் உண்டாகிற துன்பங்களை நீக்கப் பல வாக்குறுதிகளைக் கொடுத்துவிட்டு அதை அப்படியே விட்டு விட்டதுபோலப் பேசினர்கள். அதைப்பற்றி அவர்கள் சரியான முறையில் தெரிந்து கொள்ளாது, தெரிந்துகொள்ள முயற்சி செய்யாது ஏதோ பிரசார ரீதியில் பேசுவது சரியல்ல. பத்திரிகையில் வந்த செய்தியைப்படித்துவிட்டு அதுபோல் அமைச்சர் அவர்கள் செய்வது சரியா என்று கேட்டார்கள்.

கனம் அங்கத்தினர் மூக்கைய தேவர் அவர்களுக்கு அப்படி பத்திரிகையில் வந்த செய்தி தவறு, என்ன என்ன நடவடிக்கைகளை எடுக்கப் பட்டிருக்கின்றன என்று என்னல் திட்டவட்டமாகச் சொல்ல முடியும். நடந்தது என்ன என்று பார்க்கலாம். மதுரைக்கு நான் போய் இருக்கக் கூடிய நேரத்தில் ஒரு பத்திரிகைச் செய்தியை "உசிலம்பட்டியில் கம்பளிப் பூச்சித் தொந்தரவினல் ரயில் ஓடுவது நின்று விட்டது" என்பதைப் பார்த்தேன். அதைப் பார்த்தவுடன் ஏற்பட்ட வேதனை காரணமாக மற்ற நிகழ்ச்சிகளை எல்லாம் விட்டுவிட்டு உடனே அந்த இடத்திற்குச் சென்று கிட்டத்தட்ட இருபது இருபத்திரண்டு கிராமங்களுக்குச் சென்று பார்த்தேன். ஏதோ ஒரு கிராமத்தில் இருந்து விவசாயிகளுடன் பேசி அவர்களுக்கு ஏதோ வாக்குறுதி கொடுத்துக்கொண்டிருக்கவில்லை. நின்று பேசக் கூட அப்போது நேரமில்லை. ஆனல் நான் செய்தது என்ன ? கம்பளிப் பூச்சியினல் பாதிக்கப்பட்ட கிராமங்களையும், அங்குள்ள கஷ்ட நிலையையும் கண்டவுடன் உடனே அரசாங்கத்திற்கு தெரிவித்துத் தக்க நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று நினைத்தேன். அது சம்பந்தப்பட்ட அதிகாரிகளையும் சந்தித்துப் பேசினேன். அதுபற்றி ஒரு அறிக்கை சமர்ப்பிக்கும்படியாகவும் சொல்லிவிட்டு வந்தேன். அவர்கள் அன்று முதல் அங்குள்ள

[Sri V. Ramaiah] [21st August 1961

கஷ்டமான நிலையை ஆராய்ந்து பார்த்து ஒரு அறிக்கை அரசாங்கத்திற்குக் கொடுத்தார்கள். அதே சமயத்தில் மீண்டும் ஒரு வாரத்திற்குப் பிறகு அங்கு இருக்கக் கூடிய அதிகாரிகளையும், விவசாய இலாகாவைச் சேர்ந்த அதிகாரிகளையும் அழைத்து மதுரையிலேயே அதிகாரிகளின் கூட்டம் ஒன்றைப் போட்டிருந்தோம். அவர்கள் புள்ளி விவரங்களை எல்லாம் சேகரித்து நஷ்டம் இவ்வளவு ஏற்பட்டிருக்கும், இதை ஒழிப்பதற்குப் பூச்சி மருந்துகளை விநியோகிப்பது, நஷ்டம் அடைந்தவர்களுக்கு உதவுவது என்று திட்டவட்டமாகப் பல யோசனைகளைச் சொன்னார்கள்.

Sri M. KALYANASUNDARAM : நாங்கள் அறிந்த மட்டில் திரு. மூக்கையதேவர் அவர்கள் கனம் ராமையாவைப் பற்றிச் சொல்லவில்லை. அப்படியே இருந்தாலும் ரூல் 41 படி ஸ்டேட்மெண்டு கொடுக்கலாம். அதைவிட்டு இவ்வளவு நீண்ட பிரசங்கம் செய்ய வேண்டுமா ?

DEPUTY SPEAKER : The Hon. Minister perhaps wants to explain his position clearly.

The Hon. Sri V. RAMAIAH : எல்லாப் புள்ளி விவரங்களையும் வைத்துக்கொண்டு முடிவு எடுக்க வேண்டியிருந்தது. திரு. கல்யாணசுந்தரம் இங்கே கவனிக்க வேண்டும்—இதுவரையிலும் அந்தப் பகுதியில் கம்பளிப் பூச்சித் தொந்தரவினால் ஏற்படுகிற கஷ்டங்களை ஜனங்களே அனுபவித்து வந்தார்கள். அரசாங்கத்தின் கவனத்திற்கே வந்தது இல்லை. ஆனால் இந்த முறை அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டுவரச் செய்தேன். அதிகாரிகளும் சில சிபார்சுகளைச் செய்தார்கள். உசிலம்பட்டி, நிலக்கோட்டை முதலிய பகுதிகளில் கம்பளிப்பூச்சி ஒழிப்பு நடவடிக்கையும், நிவாரண வேலைகளும் எடுத்துக் கொள்ளப்பட்டன. அந்த வட்டார மக்கள் எவ்வளவு நன்மை அடைந்திருக்கிறார்கள் என்பதை அந்த வட்டார மக்களைக் கேட்டால் தெரியும். கனம் மூக்கைய தேவர் அவர்களுக்குத் தெரியுமோ என்னமோ ரூல் 41 படி திரு. சந்திரசேகரன் அவர்கள் கேட்டதற்கு கனம் அமைச்சர் அவர்கள் கொடுத்த விரிவான அறிக்கையையும் அவர்கள் பார்க்கவில்லை. அதனால் தான் இத்தகைய உபகேள்வி கேட்டார்கள் என்று நினைக்கிறேன்.

DEPUTY SPEAKER : The Hon. Minister may finish his speech soon.

The Hon. Sri V. RAMAIAH : Yes, Sir, I want to put an end to this kind of propaganda. கனம் மூக்கைய தேவர் அவர்களுக்குத் திருப்தி ஏற்படாவிட்டாலும் விவசாயிகளுடைய கஷ்டத்தை நிவர்த்தி செய்வதற்காக அந்தப் பிரச்சனையைப் பரிசீலனை செய்து என்னால் முடிந்ததைச் செய்திருக்கிறேன் என்று நான் நினைக்கிறபோது நான் சந்தோஷமே அடைகிறேன்.

Sri S. MOOKIAH THEVAR Rose.

DEPUTY SPEAKER : There cannot be a discussion on the matter. The hon. Member may resume his seat.

## IV. DISCUSSION UNDER RULE 57, VIZ., ALIENATION OF GOVERNMENT PORAMBOKE LANDS, AT SUBRAMANIAPURAM (GOLDEN ROCK PANCHAYAT) TO Messrs. T. V. S. AND SONS.

DEPUTY SPEAKER : Hon. Member Sri M. Kalyanasundaram has given notice under Rule 57 of the Assembly Rules to raise a discussion on an urgent matter of administration, viz., the alienation of Government Poramboke lands at Subramaniapuram (Golden Rock Panchayat) to Messrs. T. V. S. & Sons, depriving the Panchayat of its claim over the lands. Sri M. Kalyanasundaram may now speak.